ஓம் ஸ்ரீராஜராஜேஸ்வரி துணை



குருவே சரணம்

# ஒரு மகானின் புனிதப்பயணம்


இயற்றியவர்

சுவாமி ஞான செல்வானந்தர்

ஓம் ஸ்ரீராஜராஜேஸ்வரி துணை



குருவே சரணம்!

# பொருளடக்கம்




பக்கம்

அரவணைத்து கொள்வது இவரது தனி சிறப்பு. மேகம் விலகி கதிரொளி தோன்றுவது போல் அடியார்களின் மனதில் நல்ல ஞான ஒளியைத் தோற்றுவிப்பவர் நமது சுவாமிகள். இவரின் தெய்வீகத்தொண்டுகள் மனித சமுதாயத்திற்கு நல்வழி காட்டும். மேலும் நம் பாரதநாடு பூரணமான ஆன்மீக ஞானம்பெற்ற நன்னாடு. இதனால் இந்நாட்டைப் புண்ணிய பூமி என்று சொல்வார்கள். பெரிய மகான்களும் தீர்க்க தரிசிகளும் அவர்களுடைய அனுபவத்தாலும் தெளிந்த அறிவாலும் ஆன்மீக தத்துவங்களை நமக்குத் தந்துள்ளார்கள். தந்து கொண்டிருக்கிறார்கள். அவைகள் என்றும் சிரஞ்சீவியாக வாழும்.

தேவியின் திருவருள் எங்கும் பரவட்டும்
மக்கள் வாழ்வில் மகிழ்ச்சி பொங்கட்டும்
அன்னையின் நல்லருள் சுரக்கட்டும்
சகல மங்களங்களும் உண்டாகட்டும்
சாந்தி நிலைத்து நிற்கட்டும்



# அம்பாளைப் பிரார்த்தனை செய்வோம்

(தனிநபர் பிரார்த்தனை)

அம்மா உலக நாயகியே! ஏகப்பரம் பொருளே! இந்த உலகைப் படைத்து, காத்து, அழிப்பவளே! உன் பாதார விந்தங்களில் நீயே கதி என்று பரிபூரணமாக சரணடைகிறேன்! மகாதேவியே உன் நினைவு நீங்காதிருக்க எனக்கு வரம் தருவாய்! அன்னையே நீ அன்பும் அமைதியும் ஆனந்தமும் பொருந்தியவள்! பாவங்களை அகற்றி முக்தி தருபவள். தாய், தந்தை, குருவாக இருப்பவள்! என்னை உன் குழந்தையாக ஏற்றுக் கொள்! என் இதய பூர்வமாக உன்னை நேசிக்கச்செய்! நான் எது செய்தாலும் அது உனக்கு சமர்ப்பணமாக அமையட்டும். என் சிந்தை எல்லாம் உனக்கே தந்தேன்! அதில் உன் நினைவு நிறைந்து நீங்காதிருக்கட்டும்! அம்மா பரமேஸ்வரியே! என் இதயத்தில் உன் பேரொளி வீசட்டும்! கருணையே வடிவானவளே அம்பிகையே! ஸ்ரீராஜராஜேஸ்வரியே நீயே என் வாழ்க்கையின் வழிகாட்டி, தாயே! உன் திருவடிகளில் விழுந்து கெஞ்சிமன்றாடுகிறேன்! என்னுடைய பிரார்த்தனைக்குச் செவிசாய்த்து என்னை ஏற்றுக்கொள்வாயம்மா! நான் என்றென்றும் உன்னுடைய தொண்டன் ஓம் ஸ்ரீதேவியே சரணம்! அம்பிகையே சரணம்! ராஜராஜேஸ்வரியே சரணம்! உலகெங்கும் சமாதானமும் சாந்தியும் நிலவட்டும்.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

# ஒரு மகானின் புனிதப் பயணம்

ஸ்ரீகைலாஸ் ஆஸ்ரம மகா சமஸ்தான பீடாதிபதி ஸ்ரீஸ்ரீஸ்ரீசிவரத்னபுரி பகவத் பாதாச்சார்ய சுவாமிகள் (திருச்சி மகாசுவாமிகள்) ஒரு ராஜயோகி, ராஜரிஷி அவருடைய சொல்லும் செயலும் நம்முடைய பழம் பெரும் இந்திய நாட்டின் வேதங்கள், உபநிடதங்கள் மற்றும் தெய்வீக பக்தி ஆகியவற்றைப் பிரதிபலிப்பனவாகவே இருக்கிறது. அவருடைய நிர்வாகத் திறமையும் தனி வாழ்க்கையில் அவரிடமுள்ள குற்றம் காண முடியாத நேர்மையான நெறிமுறைகளும் அவரை வானுயர உயர்த்தியது. அவருடைய வார்த்தையில் உள்ள கருத்துக்கள் நம் நாட்டில் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த ரிஷிகளும் முனிவர்களும் சொல்லிய அரும் பெரும் கருத்துக்களை எதிரொலிப்பனவாக இருப்பதைக் காணலாம். உலகில் இயங்கிவரும் எல்லா உயிரினங்களும் அன்னை ஸ்ரீராஜராஜேஸ்வரியின் ஒரு பாகமாக இருக்கிறது. அத்தனை உயிர்களும் ஆன்மநேய ஒருமைப்பாட்டால் உடன் பிறந்தவைகளாக ஆகிவிடுகிறது என்பதுதான் அந்த மகானுடைய வார்த்தைகளின் அடிப்படைத் தத்துவம். அதுபோலவே அவருடைய வாழ்க்கையையும் அவர் அமைத்துக் கொண்டார்.

அவர் செய்யும் நல்ல காரியங்கள் ஒவ்வொன்றையும் அவரிடம் நெருங்கிப் பழகியவர்களால் தான் உணர்ந்து கொள்ளமுடியுமே தவிர, மற்றவர்களால் எளிதில் புரிந்து கொள்ள முடியாது. இந்த உலகத்தில் எண்ணற்ற அவதார புருஷர்கள் தோன்றியிருக்கிறார்கள். ஆனால் இவர் மிகவும்

வித்தியாசமானவர். எளிமையும் அடக்கமும் நிறைந்தவர். அவருடைய வாழ்க்கை சரிதமே அவருடைய பெருமைகளை அனைவர்க்கும் விளக்குகிறது. சிறு குழந்தையாக இருந்த பொழுதே அவரிடம் உயரிய பண்புகள் நிலவி இருந்தன என்பதை அவரது வரலாறுகள் தெரிவிக்கின்றன. விளையும் பயிர் முளையில் தெரியும் என்பார்கள். இந்த மகானின் உயர் தன்மைகள் அவரது இளமையிலேயே பிரகாசிக்கத் தொடங்கிவிடுகின்றன. ஒருமகான் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு முன் மாதிரியாக அமைகிறது அவரது வாழ்க்கை. அதனால்தான் அவர் தியாகத்தின் முழு உருவமாக திகழ்கிறார். உள்ளத்தைப் பரிசுத்தமாக்கிப் பயன்படுத்துவதில் தான் பெருமை இருக்கிறது. அதில் இருந்து தான் சகல நல்ல காரியங்களும் உதயமாகி செயலாகிறது. மற்றவை எல்லாம் அர்த்தமற்றவை. அவைகள் வெறும் புகைப்போல் காற்றில் கலந்துவிடும்.

மகான்களுக்குத்தெரியும் மனிதவாழ்க்கை நிலைஇல்லாதது என்று. அதனால் தான் அவர்கள் வாழும் காலத்திலேயே அரிய பெரிய காரியங்களைச் செய்கிறார்கள். நன்கு சிந்தித்து மக்களுக்காக உழைத்து அவர்களை ஆன்மீக பாதையில் அழைத்துச் செல்கிறார்கள்.

நம்மை எல்லாம் படைத்து காத்துவரும் அன்னை ராஜராஜேஸ்வரி நம்முடைய எண்ணங்களை செயல்களை நேரில் பார்த்துக் கொண்டு இருக்கிறாள். அவளுடைய ஆயிரம் கண்களும் பூமியிலே உலாவிக் கொண்டு இருக்கிறது. அவளிடத்தில் இருந்து உண்டாகிய ஆன்மாக்களின் உள்ளங்களில் எல்லாம் அவள் கலந்து இருக்கிறாள். முனிவர்கள் அந்தப்பரம் பொருளையே சதா நினைத்துக்

கொண்டிருக்கிறார்கள். சாதாரண மக்களாகிய நாமும் அது போல் தெய்வ நம்பிக்கையுடன் கவலையற்று அறிவுடன் வாழ விரும்பினால் நம்முடைய ஆன்மாவை மறைத்துக் கொண்டிருக்கும் இந்த உடலை மறந்து உள்ளே இருக்கும் மெய்பொருளான அந்த அன்னை ராஜராஜேஸ்வரியை துதிசெய்யப் பழக்கப் படுத்திக் கொள்ள வேண்டும். தன்னுடைய ஆத்மாவில் கலந்திருக்கும் அம்பாளையே சதா தியானித்துக் கொண்டிருக்கும் ஜகத்குரு மகாசுவாமிகளின் எண்ணங்கள் புனிதமானது.

அவர்கள் செய்வதெல்லாம் நற்பயனைக் கருதியே செய்கிறார்கள். கடந்த ஆண்டு 20.4.94 அன்று ஜெயந்தி பூஜையின் போது மகாசுவாமிகளின் பாதத்திற்கு அருகில் அடியேன் அமர்ந்திருந்தேன். அப்போது சுவாமிகளின் மூடிய கண்களில் இருந்து கண்ணீர் பொள பொளவென்று பெருகி வருவதைக் கண்டேன். அப்போது பட்டிணத்து அடிகள் சொன்னது என் நினைவுக்கு வந்தது. இறைவனை நினைத்து பிராத்தனை செய்யும் போது மனம் உருகி கண்ணீராக கொட்ட வேண்டும் என்கிறார். அதாவது இறைவனை நினைத்து நினைத்து மனம் உருகி வேண்டினால் அவரிடத்தில் நீங்காத நல் உறவு ஏற்படும் என்று அர்த்தமாகிறது. அரியபெரும் சாதனைகளைச் சாதித்த திருச்சி மகாசுவாமிகளிடம் அகங்காரம் சிறிதளவுக்கூட காண முடியாது. ராமலிங்க அடிகள் சொல்கிறார். ‘அகங்கார கொடுங்கிழங்கை வேரோடு பிடுங்கி எறிந்து விடுங்கள்’ என்று, அதுபோல் இவர் அகங்கார குணத்தை வேருடன் களைந்து எறிந்தவர். ஒரு சமயம் சிவானந்த மகாரிஷி அவர்களுக்கு டெல்லியில் ஒரு பாராட்டு கூட்டம் நடந்ததாம். அதில்

அவருக்கு ஏராளமான மாலைகள் போட்டு பாராட்டி பேசினார்களாம். அப்போது சிவானந்த மகாரிஷியின் மனம் மிகப் பெருமையுடன் சந்தோஷப் பட்டதாம். விழா முடிவுபெற்று அவர் ஆஸ்ரமம் வந்து தன்னுடைய அறைக்குள் சென்று சட்டையைக் கழற்றி வைத்து விட்டு, கால்களில் இருந்த செருப்பைக் கழற்றி எடுத்துத் தன் உடம்பு முழுவதும் அடித்துக் கொண்டு, ஏமனமே இப்போது உனக்கு ஆனந்தமாக, சந்தோஷமாக இருக்கிறதா, என்றாராம். பார்த்தீர்களா? மகான்கள் எல்லாம் அகங்காரப் பேயை விரட்ட எப்படி எல்லாம் முயற்சி செய்திருக்கிறார்கள் என்று.

ரமணமகா ரிஷியிடம் எப்பேர்பட்ட அதிர்ச்சியான விஷயங்களைச் சொன்னாலும் சிறிதுகூட தன்நிலை குலையாது சிரித்துக் கொண்டே இருப்பாராம். மகான்கள் வானமே இடிந்து தலையில் வீழ்ந்தாலும் அவர்கள் அதிர்ச்சி அடைவதில்லை. எல்லாம் அன்னை ராஜராஜேஸ்வரியின் செயல் என்று உள்ளச்சம நிலையில் இருப்பார்கள். நம் திருச்சி மகாசுவாமிகளும் எப்போதும் அமைதியாக, சாந்தமாக, பொருமையாகவே இருப்பார்கள். ஏசுநாதர் சொல்கிறார் நீ இறைவனைக் காண வேண்டுமானால் ஒரு குழந்தையாக மாறு என்கிறார். நம்முடைய மகாசுவாமிகளும் ஒரு வெள்ளை மனம் கொண்ட குழந்தையைப் போன்றவர். இளகிய மனம் படைத்தவர். பசி என்று வந்தவரைப் புசி என்று அன்னமிடும் வள்ளல் நம் கைலாச மகாமுனிவர். வெள்ளைப்புறாவின் குடும்பம் இந்த கைலாச ஆஸ்ரமம். வேதனை அகற்றும் வேந்தனின் தர்மக்குடில் இந்த கைலாச ஆஸ்ரமம். வந்தவரை எல்லாம் வரவேற்கும் சன்னிதானம் இந்த கைலாச ஆஸ்ரமம். இந்த மகானைப் பிரிந்திருந்தால்

நம் நெஞ்சில் ஏக்கம் வரும் நெருங்கி இருந்தால் வாழ்வில் ஏற்றம் வரும். இவர் சதா சிவ பிரமேந்திர அடிகளைப் போன்ற நிர்க்குண சித்தர். இவர் மனம் பாலை விட வெண்மையானது. பணியை விட மென்மையானது. இந்த அவதார புருஷரைத் தெய்வமாக, நடமாடும் அம்பாளாக, தேவியாக நாம் ஏற்று சிரம் தாழ்த்தி வணங்குவோமாக. நம்முடைய ராஜயோகியின் வாழ்க்கை அன்பும் பாசமும் சினேகமும் முழுமையாக அமைந்துள்ளது. இந்த மகானின் குணங்களை விளக்குவதற்குச் சொற்களுக்குச் சக்தி இல்லை. இளமை பிராயத்தில் இருந்தே மோட்சப்பிரயாணத்தில் ஈடுபட்டிருக்கும் இந்த மகானை மனிதர்களாக பிறந்த நாம் எல்லோரும் வாழ்த்துவோமாக. இந்த மகாப்பிரபுவின் அடிச்சுவற்றைப் பின்பற்றி நல்லதையே நினைத்து நல்லதையே செய்வோமாக.



# திருச்சி மகான்
# ஒரு வெண் பனிச்சிகரம்

**(வசனக்கவிதை)**

அவருடைய இதயம் வெண்பனியை விட மென்மையானது
அவருடைய மேனியைத் தழுவிய வெள்ளை உடை புனிதமானது
அவருடைய கையின் ஆசீர்வாதம் துன்பத்தைத் தூர விரட்டுகிறது
அவருடைய காலடி பட்ட இடமெல்லாம் அன்புமழை பெய்கிறது
அவருடைய குரல் பரவிய இடமெல்லாம் தர்மங்கள் நடக்கிறது
அவருடைய வார்த்தைகளை மக்கள் சமுதாயம் தெய்வ வாக்காக ஏற்கிறது
அவருடைய பேச்சுக்கள் மோட்சத்திற்கு வழி காட்டுகிறது
அவருடைய புனித எளிய வாழ்க்கை எல்லோரையும் கவர்கிறது
அவருடைய கைலாஸ ஆஸ்ரமம் பலர் பசியை விரட்டுகிறது
அவருடைய ஆன்மீக சிந்தனைகளால் பல நல்ல காரியம் நடக்கிறது
அவருடைய சாதனைகளை விட அவர் சாதிக்க நினைப்பது அதிகமாக இருக்கிறது
அவருடைய வாழ்க்கை ஆன்மீக யாத்திரையைத் தொடர்கிறது.

# வாழ்க இந்த புனித மகான்

மண் மண்ணில் கலந்து விடுகிறது. ஆற்றுநீர் கடல்நீரில் கலந்து விடுகிறது. காற்று காற்றுடன் கலந்து விடுகிறது. அதுபோல் மனிதன் இறைவனில் கலந்து விட வேண்டும். மோட்சம் என்பது அன்னை ராஜராஜேஸ்வரி தன் பக்தனுக்குக் கொடுக்கும் மிகப்பெரிய பரிசு.

# பாட்டை விரும்பும் பராசக்தி

## ஜகத்குரு திருச்சி மகானுக்கு வாழ்த்துக்கவிதை

வெள்ளுடை ஆத்ம ஞானியே நீவாழ்க!
விக்ரம சிங்கபுர தோன்றலே நீவாழ்க!
கைலாசம் கண்ட புண்ணியரே நீவாழ்க!
கைலாச ஆஸ்ரம தவமுனியே நீவாழ்க!
தவத்தால் உயர்ந்த ராஜயோகியே நீவாழ்க!
தாய் அருகில் வாழும் சித்தரே நீவாழ்க!
நல்லவர் உலகில் நலமுடனே நீவாழ்க!
நாள்தோறும் நற்பணிகள் செய்து நீவாழ்க!
அருள் பணிசெய்து அன்னை நிழலில் நீவாழ்க!
அணையா ஜோதியாய் என்றும் நீவாழ்க!
உலக மக்களின் வாழ்த்தொளியில் நீவாழ்க!
உலகாளும் நாயகியின் கண் எதிரில் நீவாழ்க!
குன்றாத புகழுடனே நிலைத்து என்றும் நீவாழ்க!
குடிமக்கள் பயம் நீக்கி குறைகளைந்து நீவாழ்க!

# கடவுளின் பிரதிநிதிகள்தான் அவதார புருஷர்கள்

இந்த உலகத்தில் மனிதர்கள் மத்தியில் தர்மம் பலவீனம் அடையும் போதும், அநியாயம் அக்கிரமங்கள் செய்பவர்களின் கை ஓங்கி நிற்கும் போதும், நன்மைகளைப் போற்றி நல்லவர்களைக் காக்கவும் அன்னை ராஜராஜேஸ்வரி இந்த மண்ணில் மனித அவதாரம் எடுக்கிறாள். அவள் சமுதாயத்தைத் திருத்தி நல்ல முறையில் அமைத்துக் கொடுத்து விட்டுபோகிறாள். மனிதனை உயர்த்தவே அவள் கீழே இறங்கி வந்து அவதாரம் எடுக்கிறாள். அம்பாளின் பெரும் சக்திமிக்க கதிர் பூமியில் விழுந்து பிரமாண்டமான வல்லமையை, ஒரு மாறுதலை உருவாக்குகிறது. அது உலகத்தைக் காத்து அமைதியை நிலை நாட்டுகிறது. ஒரு மனிதனின் வாழ்க்கை எப்படி அமையவேண்டும், அவன் எப்படி தனது வாழ்க்கை நெறிமுறைகளைப் பின்பற்றவேண்டும். சாதாரண ஆசைகளிலிருந்து அவன் எப்படி விடுபடவேண்டும் என்று வாழ்ந்து காட்டுவது அவதார புருஷர்கள்தான். சில அவதாரங்கள் ஒரு துணையுடன் கூட்டாகவே தோன்றுகிறது. சில அவதாரங்கள் தனியாகவே தோன்றுகிறது. உதாரணத்திற்கு ராமனும் சீதையும், கிருஷ்ணரும் ராதையும், வள்ளுவனும் வாசுகியும், ராமகிருஷ்ணரும் சாரதா தேவியும், காந்தியும் கஸ்தூரிபாயும் இப்படியாக துணையுடன் தோன்றினார்கள். மற்றும் சில அவதார புருஷர்கள் தனித்தனியாகவே தோன்றினார்கள். உதாரணத்திற்கு விஸ்வாமித்ரர், வியாசர், அகஸ்தியர், சங்கராச்சாரியார், ராமலிங்க வள்ளலார் போன்ற இன்னும்

அனேகர் தனியாகவே தோன்றி மனித வாழ்க்கையில் ஏற்பட்டிருந்த பாதிப்புகளை அடியோடு அகற்றி நல்ல பல உபதேசங்களைச் சொல்லி சமூகத்தை உயர்த்தி நல்வழி காட்டினார்கள். இந்த உலகத்தில் மிக மோசமான நிலை ஏற்படும்போது, பக்திகுறையும் போது அதற்குக் காரணமான தீய சக்திகளை அழித்து நல்லவர்களைக் காப்பாற்றி அவர்களுக்கு வாழ்வு கொடுப்பதற்காகத்தான் அவதார புருஷர்கள் அவ்வப்போது பூமியில் தோன்றுகிறார்கள். சமூக நலத்தையும் தர்மத்தையும் பாதுகாத்து மக்கள் தொண்டு செய்வதே அவர்களுடைய நோக்கமாகவும் கடமையாகவும் இருந்து வருகிறது. இந்த அவதார புருஷர்கள் மக்களுடன் மக்களாக கலந்து, அவர்களுடன் ஒருவராக வாழ்ந்து நல்வழி காட்டிச் சென்றுள்ளார்கள். மீண்டும் உலகில் அராஜகம் தோன்றி மோசமான நிலை ஏற்படும் போது அவதார புருஷர்கள் தோன்றுவார்கள். அப்படி தோன்றியவர்களில் ஒருவர்தான் நமது வணக்கத்திற்குரிய ஸ்ரீஸ்ரீஸ்ரீசிவரத்னபுரி பகவத்பாதாச்சாரிய மகா சுவாமிகளான திருச்சி மகா சுவாமிகள் ஆவார்கள். இவர் எளிமையாகவும், அடக்கமாகவும், ஆடம்பரமில்லாத அந்தக்காலத்து வசதிகளுடன் தான் இன்றும் வாழ்ந்து வருகிறார். இவர் எதையும ஆழமாகப் பார்க்கும் அறிஞர். கர்வம் சிறிது கூட இல்லாதவர். இந்தியாவில் பலதுறைகளைச் சேர்ந்த மேதைகள், நடிகர்கள், இசைக்கலைஞர்கள், அரசியல்வாதிகள், வியாபாரிகள் முதலிய எல்லாத்தரப்பினரும் இவரைத் தரிசிக்க வந்த வண்ணம் இருப்பார்கள். அவர்கள் மகாசுவாமிகளிடம் ஆசீர்வாதம் பெற்று முகமலர்ச்சியுடன் செல்வார்கள். யார் நல்ல காரியம் செய்தாலும் அதைப் பாராட்டி ஊக்கப்படுத்துவார். இது சுவாமிகளிடம்

இயல்பாகவே அமைந்து இருக்கும் உயர்பண்பாட்டு நாகரீகமாகும். இங்கு நடக்கும் எல்லா நிகழ்ச்சிகளையும் நேரில் பார்த்து அனுபவிக்கக் கொடுத்து வைத்தவன் இந்த அடியேன். இந்த மகான் காலத்தில் நாமும் வாழ்கிறோம் என்று பெருமைப் படுகிறேன். இவர் அமர்ந்திருக்கும் பர்ணகசாலைக்கு யார் வந்தாலும் அவர்களை வரவேற்று குறைகளைக் கவனமாக கேட்டு அவர்களைத் தைரியப் படுத்தி நல்ல உபதேசங்களைச் சொல்லுவார். மனம் திறந்து வந்தவர்களிடம் சரளமாக பேசுவார். (கள்ளம் கபடமின்றி ஒரு குழந்தையைப் போல் ஒரு மனிதன் வாழ்வனேயானால் அவனை வைகுந்த நாயகனை வணங்குவது போல் மக்கள் வணங்குவார்கள் என்று சிவானந்த மகாரிஷி சொலகிறார்). அதுபோல் இந்த மகானைத் தெய்வமாக மக்கள் வணங்கி வருகிறார்கள். மண்ணுலக மக்களின் மனத்துயர் போக்கும் மகான் திருச்சி மகா சுவாமிகள். இப்பேர் பெற்ற இம் மகான் தனக்கென்று இல்லாது மக்களுக்காக உழைக்கிறார். இவர் இன்னும் பல்லாண்டுகள் வாழ்த்து தாராள உள்ளத்தினாலும் பரந்த நேசத்தினாலும் எல்லோரையும் வாழ்த்தி ஆசீர்வதித்து வாழ வைக்க வேண்டும் என்று எல்லாம் வல்ல பரம்பொருளான ஸ்ரீராஜராஜேஸ்வரி அன்னையை நாம் எல்லோரும் பிரார்த்தனை செய்வோமாக. அவரை வாழ்த்துவோமாக.

## கடவுள் மனிதனாகப் பிறக்கிறார்

மகான் ராமகிருஷ்ண பரமஹம்சர் பெண்களுடனே பழகி காம இச்சை இல்லாமல் வாழ்ந்தார். ஆண்டாள் ஆண் இச்சை இல்லாமல் இறைவன் மேல் இச்சை கொண்டு

அவனுடன் கலந்தாள். இதுபோல் பார்க்கும் பொருள்களில் எல்லாம் இறைவன் என்ற மனப்பான்மை வந்துவிட்டால் அவர் எந்த இடத்திலும் வாழலாம். இருக்கும் இடமே கோவில். சாக்கடையில் கிடந்தாலும் மாணிக்கம் கறுத்துப் போகாது. அழுக்குப் பிடிக்காது. அதுபோல் இந்த அவதார புருஷர்கள். இவர்கள் இறைவனால் அனுப்பப்படும் மனித தூதர்கள்.

நெடுந்தூரத்துக்கு அப்பால் உள்ள நாடுகளில் கலகம் ஏற்படும் போது அதை அடக்குவதற்கு அரசன் தனது பிரதிநிதியை அனுப்புவதுபோல் உலகத்தில் எங்காவது தர்மம் கெடும் போது அங்கு தர்மத்தை நிலை நாட்டுவதற்கு இறைவனால் இந்த அவதார புருஷர்களை அனுப்பப்படுகிறது. உலகில் தோன்றிய அவதார புருஷர்கள் எல்லாம் ஒரு இறைவன்தான். அவர் பிரம்மமாகிய சமுத்திரத்தில் மூழ்கி வேறு ஒரு இடத்தில் கிளம்பும் போது கிருஷ்ணன். இன்னொரு தரம் வேறு இடத்தில் கிளம்பும் போது ஏசு கிறிஸ்து. வேறொரு இடத்தில் கிளம்பும்போது புத்தன் என்றும் வள்ளுவன் என்றும் அழைக்கப் படுகிறார்கள். இவர்கள் தேவைப்படும்போது பூமியில் அவதரித்து பெரும் மாறுதல்களைச் செய்கிறார்கள். ராமபிரான் இந்த உலகத்தில் தோன்றிய போது ஏழு ரிஷிமார்களுக்கு மட்டும் தான் ராமன் இறைவனுடைய அவதாரம் என்ற உண்மை தெரிந்து இருந்தது. **வஜ்ரவாதூலம்** என்ற மரத்தின் விதைகள் அந்த மரத்தின் அடியிலே விழுவதில்லை அந்த விதைகளில் இயற்கையாகவே பஞ்சு இணைந்து இருக்கும். அவைகள் காற்றினால் வெகு தூரத்திற்கு அப்பால் கொண்டு போகப்பட்டு பஞ்சில் இருந்து

விதை உதிர்ந்து எங்கெங்கு விழுகிறதோ அங்கெல்லாம் அந்தமரம் முளைக்கும். அதுபோல் ஒரு அவதாரப் புருஷரின் உபதேசங்கள் அவருடைய பிறப்பிடத்திற்கு அப்பால் உள்ளவர்களால் தான் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அங்குள்ளவர்கள் அவரை போற்றிப்பாராட்டுகிறார்கள். விளக்கு எறியும் போது பாருங்கள் அதன் வெளிச்சம் அதைச் சுற்றிலும் இருக்கும். ஆனால், அதன் அடிப்பகுதியில் இருட்டாக இருக்கும். அது போலவே மகான்களின் புகழ் வெளியில் பிரகாசிக்கும். உள்ளூரில் சாதாரணமாக இருக்கும். யானைத் தந்தம் என்ற பல் வெளியிலும் மற்றப்பற்கள் வாய்க்கு உள்ளேயும் இருக்கும் யானைக்கு இரண்டு விதமான பற்கள் அதுபோல் கீதையின் நாயகன் கிருஷ்ணன் வெளிப்பார்வைக்கு மனிதனைப் போலவும் உள்ளே தெய்வீக பரம சாந்தி நிலையிலும் இருந்தார். இனிய பக்தர்களே உங்களுக்கு என்று உள்ள கடமைகளை எல்லாம் முறையாக ஒழுங்காக செய்யுங்கள் அதற்கிடையில் மனதை அம்பாள் மீது நிலை நாட்டிவையுங்கள். உற்றார், உறவினர்களுக்கு வேண்டியவாறு பணிவிடை செய்யுங்கள். அன்புடன் அவர்களை நேசியுங்கள். ஆனால் உண்மையில் அவர்கள் உங்களுக்குச் சொந்தம் அல்ல, என்பதை உள்ளத்தினுள் உறுதியாகக் கொண்டிருங்கள். குடும்ப வாழ்க்கையில் ஈடுபடுபவர்களுள் பெரும்பான்மையோர் குடும்ப தொல்லைகள் என்னும் படுகுழியிலேயே மூழ்கிப் போகின்றார்கள். நல்ல பக்தியுடன் மனதைக் கடவுளிடத்தில் வைத்து இருக்கும் வெகுசிலர் தான் குடும்ப வாழ்க்கை வாழ்ந்து கெட்டுப் போகாமல் இருக்கிறார்கள். துரியோதனனும் அவனுடைய தம்பிமார்களும் அவரவர் மாளிகைகளை அலங்காரம் செய்து கிருஷ்ணபகவானை

வந்து தங்கி இருக்கும்படி வேண்டினார்கள். ஆனால் கிருஷ்ணனோ அவரது பரம பக்தனாகிய விதுரருடைய வீட்டில் மகிழ்ச்சியுடன் போய் தங்கி இருந்தார். தன் கன்று குட்டிக்குப் பசு மனமிரங்கி பால் கொடுப்பது போல் நல்லபக்தனுக்கு அம்பாள் மனமிரங்குகிறாள். உலகத்துடன் ஒட்டி வாழும் ஒருவன் தனது உலக விஷயங்களுக்கு இடையில் இறைவனைப் பற்றி சிந்திப்பானாகில் அது பெரிதும் பாராட்டுதற்குரிய விஷயமாகும். துறவி ஒருவர் சர்வகாலமும் ஈசுவரனைச் சிந்திப்பதில் வியப்பு ஒன்று இல்லை. ஆனால் குடும்பஸ்தன் ஒருவன் தனது குடும்ப பாரத்துக்கு இடையில் அம்பாளை மனதில் நினைக்க முயலுவானாகில் அது பெரிதும் பாராட்டத்தக்கது. பக்தரே நீங்கள் இப்போது இருக்கிறபடி குடும்பஸ்தனாகவே இருங்கள். ஆனால் குடும்பத்தில் இருந்து கொண்டு எப்படி வாழவேண்டும் என்பதை நீங்கள் தெரிந்து இருக்க வேண்டும். உலக ஆசைகள் உங்களைக் கெடுத்து விடும். ஆனால் குருபக்தியும் தெய்வபக்தியும் உங்களை மேல் நிலைக்கு கொண்டு வந்து சேர்க்கும். ஆசைகளை விட்டுவிட்டு குருவுக்கும் இறைவனுக்கும் பணிவிடைகளைச் செய்து வாருங்கள். குடும்ப வாழ்க்கை வாழ்கிறவர்களுக்கும் கட்டுப்பாடுமிக அவசியமானது. முயன்றால் நெறியான வாழ்க்கை வாழ்வதில் அவர்களும் வெற்றி பெறுவார்கள். வேப்பமரக் காற்றுக்கு எதிரானது புளிய மரக்காற்று. புளியமரத்தடியில் வாழ்பவன் வெகுவிரைவில் தேக ஆரோக்கியத்தை இழந்து விடுகிறான். அந்த மனிதனை வேப்பமரத்தின் கீழ் வாழச் செய்தால் கால்ப்போக்கில் நல்ல ஆரோக்கிய மடைந்து நல்ல உடல் நலத்துடன் இருப்பான். அதுபோல் நீங்கள் மகான்களின் அருகில் வாழ்ந்தீர்கள்

என்றால் உங்களுடைய கெட்ட குணங்கள் எல்லாம் அகன்று நல்ல மனிதனாக மாறி விடுவீர்கள்.

## சாதகர்கள் கவனத்திற்கு

இன்றைய சாதகர்கள் தான் நாளைய மகான்கள் அதனால்தான் அவர்களுக்குச் சில யோசனைகளை அடியேன் சொல்லத் துணிந்தேன். இனிய சகோதர்களே நீங்கள் உங்கள் பாதையில் விழிப்புடன் எச்சரிக்கையுடன் கவனத்துடன் இருக்க வேண்டும். தன்னுடைய எண்ணங்கள் தவறான பாதையில் செல்லாமல் அதை அறிவுப் பாதையில் செல்ல ஜாக்கிரதையாக கவனிக்க வேண்டும். சாதகனுக்குத் தியானமும் சரணாகதியும் மிகமிக முக்கியம். சந்தேகப் படுவதும் மூளையை ஓயாது குழப்பிக் கொள்வதும் முன்னேற்றத்தைத் தடை செய்யும். ஒரு குழந்தை தாயிடம் ஒட்டிக் கொள்வதுபோல், இறைவனிடம் ஒரு சாதகன் ஒட்டிக்கொள்ள வேண்டும். அவரை அடைய இதுதான் வழி. கேள்விகளைக் கேட்டு உங்களைக் குழப்பிக் கொள்ளாதீர்கள். கடவுளிடம் அடைக்கலம் புகுந்து பணிவாகவும் பரிசுத்தமாகவும் சந்தோஷத்துடனும் இருங்கள். சுலபமாக நேரான பக்திப் பாதையில் செல்லுங்கள். கடவுளின் அன்பும் அருளும் தனக்குள் எப்போதும் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருங்கள். உங்கள் மேல் அமிர்த மழை பெய்வதை நன்கு உணருங்கள். மனதையும் புத்தியையும் அலட்டிக் கொள்ளும் பழக்கம் கொஞ்ச நாளைக்கு இருக்கும். அதன்பிறகு தெய்வீகப் பேரானந்தம் திரண்டுவரும்.

மனதில் மாசுகள் அகன்று போகும் தூய தெய்வீக எண்ணங்கள் உண்டாகும். இந்த நிலைகளைக் கடந்த பிறகு முடிவில்லாத அமைதி உண்டாகும். துள்ளிப்பாய்ந்து ஓடும்நதிகடலில் அமைதியாக கலப்பது போல் சாந்தமாகிவிடும். உங்கள் ஆத்மாவுக்கும் மன சாட்சிக்கும் நேர்மையாக எதிலும் நடந்து கொள்ளுங்கள். யார் எதைச் சொன்னாலும் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாதீர்கள். நீங்கள் இந்த உலகத்தில் எல்லோரையும் திருப்தி படுத்த முடியாது. உங்கள் மனப் போராட்டத்தை விட்டு ஒதுங்கி நிற்கும் உணர்வுகளை வளர்த்துக் கொள்ளுங்கள். உங்களுக்குள் உள்ள தெய்வீக சக்தியை இடைவிடாது நினைவில் வைத்துக் கொள்வதன் மூலம் இது சாத்தியமாகும். சோம்பலும் அவநம்பிக்கையும் ஆத்மீக முன்னேற்றத்திற்குத் தடைக்கல் போன்றது. மனதைத் தளரவிடாமல் மந்திரத்தை ஜெபித்துக் கொண்டே சந்தோஷமாக இருங்கள். உங்களுடைய வாழ்க்கை தானாகவே, இயற்கையாகவே சரியான வழியில் செல்ல ஆரம்பிக்கும். உங்களுடைய குண இயல்புகள் ஒரு குழந்தையைப் போல் இருக்கவேண்டும். நல்லதும், கெட்டதும் நம்முடைய எண்ணத்தில்தான் இருக்கிறது. ஒன்றை வைத்துத்தான் நல்லது கெட்டதை எடைபோடுகிறோம். உங்களுக்கு நல்லதாக இருப்பது மற்றவருக்கு கெட்டதாக இருக்கும். உங்கள் மனசாட்சிப்படி முடிவெடுங்கள். மனதுக்கு அப்பாற்பட்ட நிலையில் நல்லதும் கெட்டதும் இல்லை. அந்த நிலையில் உலகம் முழுவதும் தெய்வீக ஒளியால் நிரம்பி இருப்பதைப் பார்க்கலாம். உங்களைக் கடவுளிடம் அழைத்துச் செல்வதுதான் சரியானது. உங்களைக் கடவுளிடம் இருந்து விலக்கி வேறு வழியில் அழைத்துச் செல்வது தவறானது. கடவுளை நன்றாக

உணர்ந்தவன் இந்த வேறுபாடுகளைக் கடந்தவன். அவனுடைய முழு வாழ்க்கையும் கடவுளுக்கு அர்ப்பணமாகி விட்டது. அவனுக்குக் கடவுளைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. கடவுளின் பார்வையில் நன்மை தீமை என்று எதுவுமே கிடையாது. நாம் கஷ்டப்படுவதற்கு நான் என்ற அகங்காரம் தான் காரணம். அவன் வேறு, நான் வேறு என்ற உணர்வுகள் தான் கஷ்டத்திற்கு அடிப்படை மூலக்காரணம். கடவுள் எல்லோரிடமும் அன்புடையவர். நீங்கள் கடவுளையே தியானித்துக் கொண்டு இருந்தால் எந்த குழப்பமான சூழ்நிலையிலும் சந்தோஷமாக இருக்கலாம். உலகத்தில் கடவுளுடைய சித்தம் மட்டும் தான் செயல்படுகிறது. இதை ஒரு சாதகன் உணர்ந்து கொண்டால் தீமைகளைக் காணவே முடியாது. தீமைகள் கடவுளின் சிருஷ்டி அல்ல. அது நம்முடைய மன சிருஷ்டி கடவுளின் அருள் நமக்கு கிடைத்து விட்டால் நம்கண்களுக்கு தீமையே தெரியாது. அன்பு தலை நிமிரும்போது தீமைகள் மறைந்து விடும்.

அறியாமைதான் தீமையை உண்டு பண்ணுகிறது. வெளிச்சத்தினால் இருட்டு மறைந்து போவது போல் ஞானத்தினால் தீமை மறைந்து போகிறது. கடவுள் ஒருபோதும் எந்த உயிரையும் தண்டிப்பதில்லை. தண்டனைகளை நாமே உண்டாக்கி கொள்கிறோம். நம்முடைய தவறுகளால் நாமே துன்பங்களை வரவழைத்துக் கொள்கிறோம். நாம் கடவுளை மறக்கும்போது தான் தவறுகளைச் செய்கிறோம். எல்லா மனிதர்களுக்கும் சில நல்ல குணங்கள் இருக்கிறது. கெட்ட குணங்களை நம்மிடத்தில் தேடி அதைக் காண வேண்டும். நல்ல

குணங்களை மற்றவர்களிடத்தில் காணவேண்டும். இதை பயிற்சி செய்யும்போது நம்மிடமுள்ள கெட்ட குணங்கள் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். அடுத்தவனைக் குறை கூறி அவனைப் பற்றிய தீய எண்ணங்களை நாம் நினைப்பதால் நம்முடைய மனம் மேலும் மேலும் கெட்ட அசுத்த மடைகிறது. எல்லோரிடமும் நற்குணங்களைக் கண்டு அவர்களிடம் அன்பாய் இருப்பது தான் ஆன்மீகத்தில் முன்னேற்றம் அடையவழி. பிறரிடம் நீங்கள் நல்லதைக்காணும் போது கடவுளையே காணுகிறீர்கள். ஏனென்றால் எதுவெல்லாம் நல்வைகளாக நம் கண்ணுக்குத் தெரிகிறதோ அதிலெல்லாம் கடவுள் இருக்கிறார் பிறரிடம் கடவுளைக் காண்பதால் நம் மனதில் உள்ள கடவுளைச் சுலபமாக உணரலாம்.

மற்றவர்களை குறை கூறினால் அங்கே கடவுளைக்கான முடியாது. நம்முடைய வாழ்க்கையில் துன்பங்களும் துயரங்களும் வரும்போது தான் வாழ்க்கையின் உண்மையான மதிப்பை நம்மால் உணர முடியும். உங்களைக் கடவுளிடம் அர்ப்பணித்துவிட்டு வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டநஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளுங்கள். துன்பம் என்ற நெருப்பில் நீங்கள் வாட்டப் பட்டால் அதிலிருந்து பரிசுத்தமாக நல்ல பலத்துடன் வெளிவருவீர்கள். துன்பங்கள் அதிகமாகும் போது ஆன்மீக முன்னேற்றம் அதிகமாகிறது. வெளிச்சூழ்நிலைகள் எப்படி இருந்தாலும் அமைதியுடன் சுதந்திரத்துடன் ஒரு சாதகன் செயல்பட வேண்டும். நல்ல சாதகனை துன்பங்கள் உறுத்தாது. சாதகர்கள் மகான்களுடைய வாழ்க்கை சரித்திரங்களை நன்கு படிக்க வேண்டும். மகான்களில் அனேகம்பேர் துன்ப துயரங்களில்

சிக்குண்டு மீண்டவர்கள்தான். நீங்கள் உலகத்தால் ஒதுக்கிவிடப்படும்போது கடவுளின் குழந்தையாகிறீர்கள். ஏசு, புத்தர் போன்றவர்கள் தங்களையே தியாகம் செய்தவர்கள். அவர்கள் கடவுளுக்காகத் துன்பப்பட்டார்கள். ஆன்மீகப் பாதைகள் மிகவும் விசித்திரமானது. கடவுள் தன்னுடைய உண்மையான பக்தர்களை ஏற்றுக் கொள்வதற்கு முன்னும் பின்னும் பெரிய சோதனைகளையும் துன்பங்களையும் கொடுத்து பரிசோதிக்கிறார். கடவுளை ஒருபக்தன் நன்கு உணர்வதற்கு முன் ஏற்படும் துன்பங்கள், சாதகனை பரிசுத்தப் படுத்துவதற்காக உண்டானவை. சாதகன் உயர்ந்து தெய்வீக நிலையை அடைந்த பிறகு வரும் துன்பங்கள் மனிதனின் முன்னேற்றத்திற்கும் விடுதலைக்கும் பயன்படும். அன்பான சகோதரரே உங்களுடைய வாழ்க்கையில் ஏற்படும் எல்லாவித சூழ்நிலைகளிலும் கடவுளை மறக்காமல் இருந்து தெய்வீகம் பரவ பாடுபடுங்கள். தெய்வீக வாழ்க்கை வாழுங்கள் நல்லதை செய்வோம் நல்லதையே நினைப்போம். ஆன்மீகத்தில் வளர்ந்து வரும் சாதகர்கள் பெரிய மகான்களாக உயர்ந்து இந்த நாட்டுக்கும் உலகத்திற்கும் பயன்பட வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

## மாணவர்களுக்கு ஆன்மீகத்தை போதிக்க வேண்டும்

இந்தக்காலத்தில் நாமெல்லோரும் தியானம் பழகவேண்டும். தியானம் நம்மை அமைதியாக செயல்பட வைக்கிறது. மாணவர்கள் படிப்படியாக தியானத்தை வளர்க்க

வேண்டும். இறைவனுடைய திருஉருவங்களில் ஒன்றை அதாவது காளி, துர்க்கை, பராசக்தி, சிவன், ராமன், கிருஷ்ணன் போன்ற ஒன்றை அல்லது உங்கள் இஷ்ட தெய்வம் போன்றவற்றை மனதுக்குள் தியானம் செய்ய வேண்டும். சித்திபெறும் வரையில் தினந்தோறும் காலை, மாலை விடாமல் பழகி வந்தால் மனம் அடங்கிவிடும். இதயம் ஜோதியில் நிலைத்து நிற்கும். சண்டித்தனம் பண்ணி ஓடித்திரியும் மாட்டை இழுத்து வந்து ஒரு இடத்தில் பழக்கினால் கொஞ்சநாளில் தானே கட்டி இருந்த இடத்தில் வந்து நிற்கும். அதுபோல் மனதையும் தினந்தோறும் குறித்த நேரங்களில் இழுத்து வந்து நிறுத்தும். இன்பங்களைத்தேடி புறத்தே அலையும் மனம் அமைதியையும் இன்பத்தையும் சிறிது உணரத் தொடங்கிவிட்டால் அதுவே நம்முயற்சியின்றி லட்சியத்தை நாடி வந்து கலந்து நிற்கும். சாது சங்கம், சத்குரு சேவை, தேவபூஜை, அருள் மொழிகள் பாராயணம், பஜனை, ஈகை இம்முயற்சிகள் மிக்க ஊட்டமளித்து லட்சியத்தை விரைவில் கைக்கூடச் செய்யும். முழுமுதற்பொருளான அன்னை ஒருத்தி உள்ளாள். அவள் எல்லாவற்றையும் கடந்து நிற்கும் சக்தியசொரூபி. மனித வாழ்க்கை முன் பிறவிகளில் செய்த வினைப் பலன்களுக்கு ஏற்றவாறு நடந்து வருகிறது என்பதை நன்கு உணர்ந்து நாம் நடக்க வேண்டும். பசித்தவன் மனதில் பரமன் இருக்கிறான் என்பதைக் கருத்தில் கொள்ளவேண்டும். அப்படிப்பட்டவர்களுக்குப் பசிக்கு ஏற்ற உணவு கொடுக்க வேண்டும். துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் மனப்பக்குவத்தை வளர்க்கவேண்டும். மாணவர்களிடம் நல்ல நடத்தையை உருவாக்குவது ஆன்மீக வழியில் அறவழியில் நடக்க அவர்களுக்கு பயிற்சி கொடுப்பது. போன்ற சிரமமான பெரும் கடமைகள் குருவைச்

சேர்ந்தது. குரு என்பவர் ஆன்மீக அறநெறியில் நிறைவு பெற்றவர்களாக அமையவேண்டும். இல்லையென்றால் குருடன் குருடனுக்கு வழிகாட்டுவது போல் அமைந்து விடும். நாஸ்திக சக்திகளின் ஆசைகளுக்கு உட்பட்டு இந்த காலத்து மாணவர்களில் அனேகர் மத நம்பிக்கை இல்லாதவர்களாக மாறிவிட்டார்கள். அவர்களிடத்தில் நல்ல பண்பாடுகள் இல்லை. நல்ல வாழ்க்கை பிரம்மச்சரியம் இவற்றைப் பற்றிய உண்மையான அறிவு அவர்களுக்கு இல்லை. எனவே வாழ்க்கைப் போராட்டத்தில் இறங்கும் பொழுது அவர்கள் மிக்க துன்பம் அடைகிறார்கள். இன்றைய மாணவர்கள் வேதாந்தம், தத்துவம், பக்தி, யோகம் பற்றிய சில மதச்சம்பந்தமான நூல்களைப் படிக்க வேண்டும். குருமார்கள் கீதை, ராமாயணம், பாகவதம் போன்ற புனித நூல்களை அவர்களுக்குப் போதிக்க வேண்டும். பண்டைக் காலரிஷிகளும் முனிவர்களும் கண்டறிந்த நுட்பமான உண்மைகளை இந்தக் கால மாணவர்கள் கற்று உணர வேண்டும். பிறகு ஆத்ம ஞானம் உண்டாகும் அவர்கள் உண்மையாகவும் நேர்மையாகவும் இருப்பார்கள். எல்லாம் வல்ல இறைவன் இன்றைய மாணவர்களை ஆசீர்வதிப்பாராக.

## வலைக்குள் சிக்கிய மனிதன்

இந்தக்காலத்தில் உள்ள எத்தனையோ குடும்பத் தலைவர்கள். அனேக பிரச்சனைகளைச் சமாளிக்க முடியாமல் சன்னியாசம் மேற்கொள்ளலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்கள். ஒருவர் சன்னியாசி

ஆவதென்பது அவ்வளவு சுலபமான காரியமல்ல. அதற்குத் துறவும் வைராக்கியமும் மிகமிகத் தேவை. உங்களால் ஒருமாதம் கூட வீடு, வாசல், மனைவி, மக்களை விட்டுப் பிரிந்து இருக்கமுடியாது. ஒரு சிறிய கதை சொல்கிறேன் கேளுங்கள். ஒரு கிராமத்தில் ஒரு இளம் விவசாயி இருந்தான். அவனுடைய தந்தை அவனுக்கு 3 ஏக்கர் நிலத்தை வைத்துவிட்டு காலமானான். அந்த இளம் விவசாயி நிலத்து வருமானத்தைக் கொண்டு தன் மனைவியையும் ஒரு மகனையும் காப்பாற்றி வந்தான். அவனுடைய நிலத்தை ஒட்டிய மேற்குப்பகுதி காட்டில் ஒரு துறவி வாழ்ந்து வந்தார். இந்த இளம் விவசாயி அடிக்கடி அந்த துறவியைப்போய் வணங்கி வருவான். அவன் மனதில் தானும் ஒரு துறவியாக வேண்டும் என்ற ஆவல் மெதுவாக வளர்ந்து வந்தது. ஒருநாள் அவன் துறவியிடம் சென்று நானும் ஒரு துறவியாக வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். என்வணக்கத்திற்குரிய சுவாமிஜீ நீங்கள்தான் எனக்குச் சன்னியாச தீட்சை கொடுக்க வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். அதற்குத் துறவியார் ''பக்தனே எல்லோராலும் துறவு மேற்கொள்ளமுடியாது. அதற்குத்திடமான வைராக்கியமும் நல்ல கட்டுப்பாடும் வேண்டும்" என்று அவனிடம் விளக்கி கூறினார். அதற்கு அவன் மகாப்பிரபு நான் எல்லாவற்றையும் சிந்தித்து ஒருமுடிவுடன் தான் உங்களிடம் வந்திருக்கிறேன் என்றான். சரி அப்படியானால் உனக்கு நான் சன்னியாச தீட்சை தருகிறேன் என்று முறைப்படி அவனையும் ஒரு துறவியாக்கினார். அடுத்த நாள் தன் மனைவி மக்களிடம் வந்து விஷயத்தைச் சொல்லி, நான் இன்று முதல் உங்களை எல்லாம் விட்டுப் பிரிந்து ஒரு துறவியாகிறேன். நீயும் உன் மகனும் இந்த நிலத்தை வைத்துப் பிழைத்துக் கொள்ளுங்கள்.

என்று முடிவாக, கண்டிப்பாக சொல்லிவிட்டு மறுநாள் காட்டில் உள்ள துறவியாரிடம் வந்து சேர்ந்தான். அடுத்தநாள் அவன் ஒரு குளத்தில் தனியாக குளித்துக் கொண்டிருந்தான். அவ்வழியாக சென்ற துறவியார் அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே போய்விட்டார். மறுநாள் அந்த புதுத் துறவி குளத்தில் குளித்துக கொண்டிருந்தான் அவன் அருகில் ஒரு நாய்க்குட்டி இருந்தது. அவ்வழியாக வந்த துறவியார் அதைக் கவனித்துவிட்டார். அவன் அருகில் சென்று அந்த நாய்குட்டியைப் பற்றி விசாரித்தார். அதற்குப்புதுத்துறவி சொன்னான், பிரபு இந்த நாய்குட்டி எப்போதும் என் கூடவே இருக்கும் அதைவிட்டு என்னால் பிரிந்து இருக்கமுடியவில்லை. அதனால் அதைத் தூக்கிக் கொண்டு வந்து விட்டேன் என்றான். சரி என்று சிரித்துக் கொண்டே துறவியார் போய் விட்டார். அடுத்தநாள் அந்த புதுத்துறவி குளத்தில் குளித்துக் கொண்டிருந்தான். அந்த நாய்க்குட்டியின் அருகில் ஒரு பையனும் நின்று கொண்டிருந்தான். அந்த வழியாக வந்த துறவியார் அதைப் பார்த்து விட்டு அருகில் சென்று யார் இந்த பையன் என்று விசாரித்தார். புதுத்துறவி சொன்னான். பிரபு இந்த நாய் குட்டியை விட்டுவிட்டு இந்த பையனால் ஒருநாள் கூடப்பிரிந்து இருக்க முடியவில்லை. வீட்டில் அழுதுதொல்லைக் கொடுக்கிறான். அதனால் இவனையும் இங்கு அழைத்து வந்துவிட்டேன் என்றான். அப்படியா சரி என்று துறவியார் சிரித்துக் கொண்டே போய்விட்டார். அடுத்தநாள் புதுத்துறவி குளத்தில் குளித்துக்கொண்டு இருந்தான். அருகில் ஒருநாய்க்குட்டி, ஒருபையன், ஒரு பெண் ஆகியோர் நின்றுக்கொண்டு இருந்தார்கள். அந்த வழியே வந்த துறவியார் இதை கவனித்துவிட்டு அருகில் சென்று புதுத்துறவியிடம் இந்த

பெண்யார் என்று கேட்டார். இவள் என்னுடைய மனைவி என்று பதில் சொன்னான். அவள் ஏன் இங்கு வந்தாள் என்று துறவியார் கேட்டார். பிரபு என் மனைவியால் இந்த பையனைவிட்டு பிரிந்து இருக்க முடியவில்லை. இந்தபெண் சதா அழுதுகொண்டே இருந்தாள், அதைப்பார்த்துக் கொண்டு என்னால் பொறுத்திருக்க முடியவில்லை. அதனால் அவளையும் அழைத்துக் கொண்டுவந்து விட்டேன் என்று பதில் சொன்னான். துறவியார் சிரித்துக் கொண்டே நான் அன்று சொன்னது ஞாபகம் உனக்கு இருக்கிறதா? எல்லோராலும் துறவியாக முடியாது. சரி நடந்தவை நடந்துமுடிந்தவைகளாக இருக்கட்டும். நீ உன் மனைவி குழந்தைகளை அழைத்துக் கொண்டு போய் முன் போல் விவசாயம் செய்து குடும்பம் நடத்துவாயாக என்று அவர்களை மீண்டும் கிராமத்திற்கு அனுப்பி வைத்தார் துறவியார்.

## திருச்சி சுவாமிகள் ஞானமும் பக்தியும் நிறைந்தவர்

இந்த மகான் சிறுப்பிள்ளையாக இருக்கும்போதே ஆன்மீகத் துறைக்கு வந்துவிட்டார். இப்போது இவர் இந்திய ஆன்மீகத் துறையில் நன்கு பிரகாசிக்கும் அரிய மகான்களில் ஒருவராக திகழ்கிறார். ஒரு ஜீவன் முக்தர் எப்படி இருப்பாரென்று சாஸ்திரங்கள் வர்ணிப்பதுபோல் ஆனந்த மயமானவர். பற்றும் கவலையும் அற்ற செயல்களுக்கு அவருடைய வாழ்க்கை ஒரு அழகான விளக்கம். தான் என்ற ஆணவத்தைக் கடந்த ஒருவன் எங்கும் எதிலும் அம்பாளின்

உருவத்தை காண்கிறான். என்ற சிறந்த உண்மைக்கு இந்த மகான் ஒரு சான்றாக, விளக்கமாக, இருப்பதை நாம் காணலாம். அம்பாளும் தானும் ஒன்று என்பதை அவர் உணர்ந்து இருக்கிறார். அப்பாளின் திருவருளுக்கு உண்மையான உயிருள்ள சின்னம் திருச்சி மகாசுவாமிகள். பலதரப்பட்ட அனுபவங்களும் அம்பாள் மேல் அசைக்க முடியாத நம்பிக்கையும் அவரை ஒரு சமநோக்குடைய மகானாக்கி இருக்கிறது. எல்லா மதக் கொள்கைகளும் அடிப்படையில் ஒன்றுதான் என்று அவருடைய அனுபவங்கள் நிச்சயப் படுத்தி இருக்கிறது. இவர் அம்பாளின் சேவைகளைத் தொடர்ந்து செய்து கொண்டு இன்பத்திலும் ஆனந்தத்திலும் மூழ்கி இருப்பதை நாம் காணலாம். அன்பைப் பொழியும் இடமாக இந்த மகானுடைய ஸ்ரீகைலாஸ் ஆஸ்ரமம் தலை நிமிர்ந்து காணப்படுகிறது. நாம் எல்லோரும் இவரது மேன்மையான சிறந்த தெய்வீக வாழ்க்கையைப் பின் பற்றி, சொற்களால் விளக்கிக் கூறமுடியாத உயர்ந்த தெய்வீக அனுபவத்தைப் பெறுவோமாக.

## மனமாற்றங்கள்

மனிதனின் மனம் அடிக்கடி மாறிக்கொண்டே இருக்கிறது. அவனது எண்ணங்கள் ஒன்றுபட்டு இருப்பதில்லை. சதா சர்வ காலமும் அது அலைந்து கொண்டே இருக்கும். அதைப்பிடித்து ஒரு இடத்தில் நிறுத்த வேண்டும். அதற்கு நல்ல பயிற்சியும், விவேகமும், வைராக்கியமும் தேவை. மனதைக் கட்டுப் படுத்தியவர்கள்தான் மகான்கள். உலக சிந்தனைகள்

இல்லாமல் எப்போதும் கடவுளையே தியானித்துக் கொண்டிருப்பவர்கள் தான் மகான்கள். இறைவனிடம் நம்பிக்கை இல்லாதது தான். இன்றைய மனிதன் படும் துன்ப துயரங்களுக்கு எல்லாம் காரணம். மனிதனை உலக ஆசைகள் படாத பாடு படுத்துகிறது. அதைவிட்டு அவர்களால் மீண்டும் வரமுடியவில்லை. ஒரு சின்ன உதாரணம். உலகநாதன் என்ற ஒரு வாலிபன் தனிமையில் வாழ்ந்தான். அவன் சம்பாதிக்கும் பணத்தை செலவு செய்யாமல் ஒரு பையில் போட்டு சேமித்து வந்தான். ஒரு நாள் அவன் இருந்த தெருவில் ஒரு சாமியார் துறவு வாழ்க்கையைப் பற்றி பிரசங்கம் செய்தார். அந்த சாமியாரின் பிரசங்கம் இந்த உலகநாதனின் மனதை மாற்றியது. தானும் ஒரு துறவியாக வேண்டும் என்று எண்ணி அடுத்தநாள் தான் சேமித்து வைத்திருந்த பணப்பையைக் எடுத்துக் கொண்டு கங்கையில் போடுவதற்குச் சென்றான். சிறிது நேரம் கரையில் நின்று சிந்தனை செய்தான். பிறகு நானும் ஒரு துறவியாகியே தீருவேன் என்று வைராக்கியத்துடன் நாணயங்கள் அடங்கியப் பணப்பையை கங்கையில் போட்டான், பிறகு முழுக்குப்போட தண்ணீரில் இறங்கி முக்குளித்து கண்களைத் திறந்துப்பார்த்தான். தண்ணீருக்கு அடியில் இரண்டு கனமான தங்க காப்புகள் கிடப்பதைக் கண்டான். (இவனுக்கு முன்னால் யாரோ அந்த தங்ககாப்புகளை கங்கைக்குச் சமர்ப்பணம் செய்திருந்தார்கள்) அந்த இரண்டு காப்புகளையும் கையில் எடுத்துக்கொண்டு கரைக்கு வந்து கொஞ்சநேரம் சிந்தித்தான். மீண்டும் அவனை உலக ஆசை பற்றிக் கொண்டது. இதைவிற்றால் நிறையபணம் கிடைக்குமே என்று சந்தோஷத்தில் துள்ளிக்குதித்தான். அவனுடைய மனிதில் இருந்த வைராக்கியம் போய் விட்டது. மறுபடியும் கங்கையில் இறங்கி வீசி எறிந்த தன்னுடைய

பணப்பையைத் தேடி எடுத்துக் கொண்டு, மீண்டும் தன் வீடு வந்து பழைய வாழ்க்கையை வாழ ஆரம்பித்தான்.

## சபலப்புத்தி

இன்னும் ஒரு சிறு உதாரணம் சொல்கிறேன். செல்வச்சிறப்புடன் வாழ்ந்து வந்த ஒரு மனிதர் திடீர் என்று ஒருமன மாற்றம் ஏற்பட்டு தன் குடும்பம், சொத்து, சுகங்கள் இனிய நண்பர்கள் எல்லோரையும் உதறித்தள்ளி விட்டு துறவியாக சன்னியாசம் பெற்று, ஒரு கோவணத்தை மட்டும் இடுப்பில் கட்டிக் கொண்டு காலில் செருப்பு கூட இல்லாமல் காட்டு வழியில், தவம் செய்ய இடம் தேடி போய்க் கொண்டு இருந்தார். அவர் சென்ற பாதையில் குத்துக்கற்களும், முற்களும், புதர்களுமாக இருந்தது. எனவே அவர் ஒவ்வொரு அடியையும் பூமியைப் பார்த்து நடக்க வேண்டி இருந்தது. அவர் தரையை உற்று நோக்கியவாறு மெதுவாக நடந்து போகும்போது அவர் கண்களில் ஒரு விலை உயர்ந்த மாணிக்கக்கல். ஒன்று தென்பட்டது. நின்று அதை எடுத்துப் பார்த்தார். அதுஒரு விலை உயர்ந்த அற்புதமான மாணிக்கக்கல் அவர் மனம் மாறிவிட்டது. மறுபடியும் மறுபடியும் சிந்தித்துப் பார்த்தார். விலை உயர்ந்த அந்த கல்லைத் துறக்க அவருக்கு மனம் வரவில்லை. அந்தக்கல்லை தன் கையில் இறுக்கிப் பிடித்துக் கொண்டு வந்த வழியே திரும்பி வீட்டுக்கு வந்து தன் பழைய வாழ்க்கையை தொடர்ந்தார். துறவு வாழ்க்கையை எல்லோரும் நினைத்த மாத்திரத்தில் பெறமுடியாது அதைக் கடும் பயிற்சிகளாலும் வைராக்கியத்தாலும் பிடிவாதமான கட்டுப்பட்டாலும்

மட்டுந்தான் பெறமுடியும். சபலபுத்தி உள்ளவர்களால் ஒரு துறவியாக முடியாது. இல்லறத்தில் இருந்து வாழ்க்கை நடத்தும் சகோதரர்களே, நீங்கள் குடும்பத்தில் வாழ்ந்து கொண்டே எல்லாம் வல்ல அன்னை ராஜராஜேஸ்வரியை எப்போதும் மறக்காமல் வாழ்க்கையை நடத்துங்கள். அவள் உங்களை அரவணைத்து வழி நடத்திச் செல்வாள்.

## அன்புதான் உலக மகா சக்தி

மிக மிக உயர்ந்த சித்திகள் எல்லாம் தெய்வீக அன்பில் இருந்து உருவானதுதான். எல்லா விதமான ஆன்மீக சாதனைகளும் இந்த இனிய எல்லையில் தான் போய் முடிவடைய வேண்டும். அன்புதான் நம்முடைய சாதனைகளின் கடைசி முடிவாக இருக்க வேண்டும். அன்பே உருவான கடவுளின் உருவத்தில் கலந்து அவராகவே ஆகிவிட நாம் முயற்சி செய்ய வேண்டும். உங்களுடைய எல்லா உணர்ச்சிகளும் அன்பு மயமாகவே இருக்க வேண்டும். அன்பு இல்லாத வாழ்க்கை வறண்ட பாலைவனம் போன்றது. எல்லா ஜீவராசிகளும் அன்புக்குக் கட்டுப்படுகிறது. அருள், அன்பு, ஆனந்தம் மூன்றுமே ஒரே பொருளை குறிக்கும் சொற்கள்தான். புத்தியினால் செய்யும் சாதனைகளும் கற்பனைத் திரத்தினால் செய்யும் சாதனைகளும் அன்பினால் செய்யும் சாதனைக்கு ஈடு ஆகாது. ஒரு மனிதனின் வாழ்க்கையில் உண்டாகும் சண்டைசச்சரவுகள் அன்பு இல்லாமையால் தான் ஏற்படுகிறது. வாழ்க்கையில் ஒவ்வொரு அம்சத்தையும் இந்த அன்பு சிறப்பாக்குகிறது. தூய்மையாக்குகிறது. புனிதமாக்குகிறது. துன்பங்களை

எல்லாம் இன்பமாக்குவது அன்புதான். ஆன்மீக அடிப்படையில் உண்டான அன்புதான் மிகச் சிறந்தது. அதுதான் சுத்தமான இன்பத்திற்குக் காரணம். நீங்கள் மற்றவர்களை நேசிப்பது அவன் உங்கள் உறவுக்காரர் என்பதற்காக அல்ல, நீங்களும் அவனும் ஒரே ஆத்மா என்பதற்காத்தான். அன்பு ஆரம்பத்தில் குற்றங்களைக்காணும் ஆனால், அது கடைசியில் குற்றங்களைக் காண்பதே இல்லை. குற்றம் காண்பது அன்பைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டி கொலை செய்தது போல் ஆகும். நாம் மனதுக்கு அப்பால் செல்ல வேண்டும். அன்பு எல்லாத் தடைகளையும் உடைத்து தூள் தூளாக்குகிறது. அன்பு என்ற போதையில் உடல் உணர்ச்சிகள் மறைந்து போகிறது. அன்பு உயிர்களை ஒன்றுபடுத்தும் ஒரு மகத்தான சக்தி. அன்பு, ஜாதி, மதம், உயர்வு, தாழ்வு போன்ற வேறுபாடுகளைக் கரைத்து விடுகிறது. அது ஒருமைப்பாட்டை உருவாக்குகிறது. ஆனால் அந்த அன்பு உண்மையானதாக இருக்கவேண்டும். போலியான அன்பு ஒரு நாள் வெட்டவெளியாக விடும். ஆத்ம உணர்வுடன் எல்லோரையும் சமமாக நேசிக்க வேண்டும். அன்பு அன்பைப்பெறும் என்று சொல்வார்கள். அதுபோல் கருணை கருணையை உண்டாக்கும். மற்றவர்கள் மேல் நாம் அன்பாக நடக்கவில்லை என்றுதான் ஜனங்கள் நம்மை வெறுக்கிறார்கள். நாம் அவர்களை நேசித்தால் தானாகவே அவர்களின் அன்பு நமக்கு கிடைத்துவிடும். அவர்களிடம் காட்டும் அன்பு திரும்பி நம்மை நோக்கிவரும். நம்முடைய அன்பும் அவர்களுடைய அன்பும் இரண்டு நதிகள் கலப்பது போல் ஒன்று பட்டு விடுகிறது.

அன்பு கொடுக்கல் வாங்கல் செய்யும் பொருள் அல்ல

இரண்டு ஆத்மாக்கள் தானாக ஒன்றுபடுவதுதான் அன்பு. அன்பே உருவான கடவுள் நம் எல்லோர் இதயங்களிலும் வாசம் செய்கிறார் என்று நாம் உணர வேண்டும். நாம் தெய்வீக அன்புக்குக் கட்டுப்பட்டால் அன்பின் வடிவங்களாக மாறி விடுகிறோம். நினைப்பாலும் தியானத்தாலும் கடவுள் நமக்குள் இருப்பதை உணர்கிறோம். நம்மை அவர் அன்பாலும் ஒளியாலும் நிரப்புகிறார். அவருடைய அன்பானது நம் மூலமாக பிரகாசிக்கும். நாம் அன்புடன் பார்க்கிறோம். அன்புடன் பேசுகிறோம். அன்புடன் கொடுக்கிறோம் அன்புடன் பெற்றுக் கொள்கிறோம்.. அன்புடன் எல்லா வேளைக்ளையும் செய்கிறோம். கடவுளிடம் காட்டும் அன்பை எல்லா ஜீவராசிகளிடத்திலும் காட்ட வேண்டும். ஏனென்றால் கடவுளே எல்லாமாக இருக்கிறார். அன்பு ஒருமைப்பாட்டின் உணர்வு. வெறுப்பு வேற்றுமையின் உணர்வு. குறுகளான பாதைகளைக் கடந்து செல்லுங்கள். இந்த உலகத்தை அன்பினால் அரவணைத்துக் கொள்ளுங்கள். அன்புதான் உலகம். அது உங்களுடைய உடல். அன்பே உருவாக அதில் வாழுங்கள்.

## ஆசையைக்கொன்று விடுங்கள்

ஞானிகளும் மகான்களும் ஆசையைக் கொன்ற பிறகுதான் மேல் நிலை அடைந்தார்கள். தற்பெருமையும் ஆசையும் தான் மனிதனின் அமைதியைக் கெடுக்கிறது. தற்பெருமை என்பது ஓர செயலைச் செய்துவிட்டு அதை நான்தான் செய்தேன் என்று சொந்தம் கொண்டாடுவது.

அதாவது அந்த சாதனைக்கு நான்தான் காரணம் என்று சொல்லிக்கொண்டுப் பெருமைப் படுவது. ஆசை என்பது ஒரு பொருளை அல்லது உடைமையை இது என்னுடைய நிலம், இது என்னுடைய வீடு, இது என்னுடைய கார், இவள் என் மனைவி, இவன் என் மகன் என்று பற்றிப் பிடித்துக் கொள்வது. இப்படிப்பட்ட ஆசைகள்தான் அமைதியான வாழ்க்கைக்கு முதல் எதிரி. உள்ளத்தில் அமைதி இருந்தால் தான் உலகில் அமைதியாயிருக்கும். அதனால் அமைதிக்கு விரோதமான ஆசைகளை விரட்டி யடிக்க வேண்டும். ஆசையை உருவாக்கி வளர்த்து விட்டு பிறகு அவற்றை அழிப்பதற்கு முயற்சி செய்யாதீர்கள். உள் மனதில் ஆசைகள் தலைதூக்கும் போதே அதை வெட்டி வீசி விடுங்கள். உலக இன்பங்கள் பற்றுதலை உண்டாக்குகிறது. பற்றுதல் ஆசையை உண்டாக்குகிறது. ஆசை காமத்தை உண்டாக்குகிறது. காமம் கோபத்தை உண்டாக்குகிறது. கோபம் குரோதத்தை உண்டாக்குகிறது. குரோதம் மனிதனுடைய சமநோக்கை அழித்து விடுகிறது. ஆசையினுடைய சேஷ்டைகளால் மனம் திசைமாறிப் போகிறது. மனிதனுடைய எண்ணங்களைத் திசை திருப்புவது இந்த ஆசை தான். பாவம் செய்யத் தூண்டுவதும் இந்த ஆசைத்தான். ஆசைகளை வென்றவனால் தான் ஆத்மாவை உணரமுடியும். மகான்கள் ஆத்மாவை உணர்ந்தவர்கள். உலகத்தில் தோன்றிய மகான்கள் எல்லாம் ஒரே மாதிரியான உண்மைகளைத்தான் சொல்கிறார்கள். நாம் நம்மை தூய்மைப் படுத்திக் கொண்டு எல்லா உயிர் இனங்களிடத்திலும் அன்பும் கருணையும் கொள்ள வேண்டும் என்கிறார் புத்தர். நாம் நம்மை நேசிப்பதைப் போல் எல்லா உயிர்களையும் நேசிக்கவேண்டும் என்று ஏசுநாதர் சொல்கிறார். எல்லோரிடத்திலும் கடவுளைக்

காணவேண்டும் என்று கீதையில் கிருஷ்ண பகவான் சொல்கிறார். கடவுள் சித்தத்திற்குப்பணிந்து நாம் அவருடைய கருவிகளாக இருந்து செயல்படவேண்டும். என்று நபிகள் நாயகம் சொல்கிறார். இந்த பெரிய மகான்களின் போதனைகளை நாம் எல்லோரும் கடைப்பிடித்து அதுபோல் நடந்தோமானால் எந்தக் காரணத்தைக் கொண்டும் துன்பங்களும் சச்சரவுகளும் நம் வாழ்க்கையில் தலைத்தூக்காது. பலவிதமான கொள்கைகளும் நம்பிக்கைகளும் கொண்டு எல்லா மதங்களும் ஒரே குறிக்கோளுக்காகத்தான் பாடுபடுகிறது. கீதை, பைபிள், குரான் போன்ற வேத நூல்கள் மனிதர்களை நல்வழிப்படுத்துகிறது.

# தெய்வ நம்பிக்கையுடன் சேவை செய்யுங்கள்

அன்னை ராஜராஜேஸ்வரியை எப்போதும் மனதில் வைத்து பிறருக்கு உபகாரமாக வாழுங்கள். சாது, சன்னியாசி, ஏழைகள் போன்றவர்களுக்குச் சேவை செய்யுங்கள். இனிய மக்களே உங்களுக்கு இன்பம் தருவதும் மனதில் அமைதியை உண்டாக்குவதும் இந்த சேவை ஒன்றுதான். உலகத்தோடு ஒத்து பிறருக்கு உபகாரமாய் வாழும் வாழ்க்கையில், ஒன்று முடிந்ததும் உடனே மற்றொன்று செய்யத் தொடங்குங்கள். இடை விடாமல் சேவை செய்வதில் சந்தோஷம் இருக்கிறது. அந்த சந்தோஷத்தில் மனதுக்கு நிம்மதியும் ஒய்வும் கிடைக்கிறது. வெறுப்போ, அதிருப்தியோ இல்லாமல் காரியங்களைச் செய்ய வேண்டும். எந்த காரியமும் இயற்கைத் தத்துவங்களுடன் ஒத்துத்தான் முடிவடைகிறது. உலகமானது இயற்கை அன்னையான பராசக்திக்கு கட்டுப்பட்டு ஒழுங்கும் ஒற்றுமையும் பொருந்தியதாக இருக்கிறது. நீங்கள் நன்மை செய்தாலும் தீமை செய்தாலும் இந்த உடல் ஒருநாள் மண்ணோ, சாம்பலோ ஆவது நிச்சயம். எனவே நல்லதை நினைத்து நல்லதைச் செய்து தெய்வமுண்டு, ஒழுங்குண்டு, அமைப்புகள் உண்டு என்று இந்த உலகத்தை நடத்திச் செல்லும் அன்னை ராஜராஜேஸ்வரியிடம் விசுவாசமும் பக்தியும் அன்பும் வைத்து அமைதியாக வாழுங்கள்.

# உபசரிப்பு

எல்லோரும் இன்புற்றிருப்பதுவே அல்லாமல் வேறொன்றும் அறியேன் பராபரமே. யாருக்கும் சற்றேனும் துக்கமோ, தொல்லையோ, கெடுதலோ ஏற்படக் கூடாது. என்ற எண்ணம் இதயத்தில் ஏற்படவேண்டும். நமக்கு எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும் சரி நம்முடைய தந்தை, தாய், மனைவி, குழந்தைகள், சகோதரர்கள் அவர்களின் மனைவிகள் ஆகியோருக்குச் சௌகரியம் செய்து கொடுத்தால் நம்முடைய இதயத்தில் அமைதி ஏற்படும். இந்த நிலையில் நம்முடைய வீட்டிற்கு வெளியிலும் இயன்ற அளவு நன்மை செய்தோமானால் உள்ளத்தில் ஆனந்தத்தின் இனிய அலைகள் பாயத்தொடங்கிவிடும். ஆனால் கைம்மாறு கருதி சுயநலத்துடன் பிறருக்கு உதவினால் நம்முடைய முன்னேற்றம் தடைப்படும். என்னுடையது என்ற பற்றுதல் இல்லாமல் பிறருக்கு உதவிசெய்தோமானால் நல்ல பயன் ஏற்படும். என்னுடையது என்று நல்ல காரியத்தைச் செய்தாலும் பிறகு அந்த பற்றுதலை அகற்றிவிட்டோமானால் அப்போது ஏற்படும் பயனும் முன் சொன்னதற்குச் சமமாக ஆகிவிடும். ஒருவன் வழிதவறித்தவிக்கிறான், நம்மைக் கேட்கிறான் அப்போது மிகவும் முக மலர்ச்சியுடன் அவனுக்கு வழிசொல்ல வேண்டும்.

கொஞ்சதூரம் அவனுடன் தொடர்ந்து சென்று திரும்பினால் நல்லது. அப்போது நம்முடைய உள்ளத்தில் சுகத்தையும் அமைதியையும் அப்படியே அனுபவிக்க முடியும். வழிதெரிந்தும் சொல்லாமல் போனோமானால் நம் உள்ளத்தில் இன்பம் ஏற்படாது. இதை நீங்கள் செய்து

பார்த்துப் புரிந்து கொள்ளலாம். தாகம் கொண்டவனைப் பார்த்தால் அவனை அழைத்து தண்ணீர் கொடுத்துவிட்டுப் பார்த்தோமானால் நம்முடைய உள்ளத்தில் இன்பம் உண்டாகும் அது ஒரு சுகம். இந்த சுகம் நமக்கு மங்களம் செய்யும். நாம் ஒரு விருந்து அல்லது இறைவனைப் பற்றிய சொற்பொழிவு அல்லது மங்கள காரியங்களுக்கு ஏற்பாடு செய்யயும்போது வருகிறவர்களை அன்புடன் வாருங்கள், வாருங்கள், என்று அழைத்து அவர்களைத் தக்க இடத்தில் அமர்த்த வேண்டும். அப்போது நம் இதயத்தில் நாம் உணரும்படி அமைதி ஏற்படும். ஆனால் இங்கே உட்காரு, அங்கேபோ, என்றெல்லாம் அதட்டுவது சரியல்ல. நம் செல்வாக்கைப் பொது இடத்தில் காட்டிக் கொள்ளக்கூடாது. அது அமைதியைக் கொடுக்காது. ஏனென்றால் நம்முடைய அகங்காரம் மற்றவரைப் புண்படுத்திவிடும். இப்படி நடந்துகொண்டால் சமத்துவம் வராது. முடிந்தவரை மற்றவர்களுக்கு நன்மையே செய்வோம்.

## முடிவுரை

அடியேனுக்கு சில வருடங்களாக ஸ்ரீகைலாஸ் ஆஸ்ரமத்தில் தங்கி சேவை செய்யும் வாய்ப்பு கிடைத்தது. சில பக்தர்களும் நண்பர்களும் திருச்சி மகாசுவாமிகளின் வாழ்க்கையை பின்னனியாக வைத்து அவருடைய உயர்ந்த குண இயல்புகளை அவருக்கே உரித்தான பலசிறப்பு நற்பண்புகளை ஒன்று திரட்டி எழுதும்படி பணிந்தார்கள். ஏற்கனவே அவருடைய வாழ்க்கை வரலாறுகள் அடங்கிய அனேக நூல்கள் வெளி வந்திருக்கிறது. அடியேன் கூட

“நடமாடும் தெய்வம்” என்று 1994ல் கவிதைகள் அடங்கிய ஒரு புத்தகம் எழுதி வெளியிட்டு இருந்தேன். இருப்பினும் சுவாமிகளைப் பற்றிமேலும் அறிந்தவைகளை, தெரிந்தவைகளை, பக்தர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம் என்ற நோக்கத்தில் பல மகான்களுடன் ஒப்பிட்டு எழுதத் துணிந்தேன். அவருடைய மென்மையான குண இயல்புகளும் பேச்சும் அவர் ஒரு திறந்த உள்ளம் கொண்டவர் என்று காட்டுகிறது. அடியேனைப் போல் அவரும் ஆன்மீகப்பசி கொண்டவர் என்று அடியேனால் உணர முடிந்தது. இனிவரும் நாளில் ஆன்மீக வாழ்க்கை மேலும் வளம் பெறும் என்று உணர்ந்து தெளிந்தேன். அடியேனை ஜகத்குரு திருச்சிமகானின் காலடியில் இருக்கச் செய்வது அன்னை ராஜராஜேஸ்வரியின் சித்தம் போலும். இது அடியேனுக்குப் பேரின்ப அனுவம். அவ்வப்போது மகானின் ஞான மொழிகளைக் கிரகித்துக்கொண்டு சொர்க்க நிலையை அடைவேன்.

அந்த மகானின் முகத்தில் தோன்றும் அமைதி ஒளியின் மூலம், அவர் ஆன்மீக வாழ்வில் நல்ல பக்குவம் அடைந்தவர் என்று அடியேன் கண்டுக் கொண்டநாள் முதல் சரணடைந்தேன். அவர் எளிமை, தூய்மை, அடக்கம் ஆகியவற்றின் மொத்த உருவாக காட்சி தருகிறார். அவரிடம் குருஅருள் என்ற சூரிய ஒளி பிராகசித்துக் கொண்டிருக்கிறது. தவத்தின் மூலம் பல ஆண்டுகளாக அவர் வளர்த்துக் கொண்ட உயர்ந்த உன்னதப் பண்புகளே அவரை ஒரு மகானாக உருவாக்கி உள்ளது. இப்பேர் பெற்ற மகானின் பாத சுவட்டை நாமெல்லோரும் பக்தியுடன் பின்பற்றுவோமாக, அவரை வாழ்த்துவோமாக. மேலும் இந்த

புத்தகத்தில் சாதகர்கள், பள்ளிமாணவர்கள், பக்தர்கள், குடும்பஸ்தர்கள் போன்றவர்களுக்குப் பல கருத்துக்களை அடியேன் சுருக்கமாக சொன்னதைப் படித்தீர்கள். படித்தவைகளை மனதில் நிறுத்தி நல்வழி செல்ல உங்கள் எல்லோருக்கும் அடியேனின் ஆசீர்வாதங்கள். குருவே சரணம்.

வணக்கம்

**சுவாமி ஞானசெல்வானந்தர்**





